## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| K. P. கேசவன் | சகோதர ரத்தினங்கள் | ... ... பசுபதி |
| K. K. பெருமாள் | | ... ... சபாபதி |
| T. S. பாலையா | ... ... | கோபாலன் |
| K. நாகராஜன் | ... ... | ஜமீன்தார் |
| மாஸ்டர் ரத்நம் (5 வயது) | ... | சாரநாதன் |
| M. கண்ணன் | ... ... | சன்யாசி |
| M. மாசிலாமணி | ... ... | முருகதாஸ் |
| G. சக்கிரபாணி | ... ... | இன்ஸ்பெக்டர் |
| P. G. வெங்கடேசன் ... | ... | மார்வாடி |
| S. N. கண்ணுமணி | ... ... | சாந்தா |
| S. N. விஜயலட்சுமி | ... ... | லாசா |
| M. M. ராதாபாய் | (வேலைக்காரி) | பார்வதி |
| ராஜம் (9-வயது) | ... ... | சரோஜா |
| கிருஷ்ணவேணி | ... ... | தாசி சுந்தரி |
| அலமேலு அம்மாள் | ... | வேலைக்காரி குப்பிபாட்டி |

# இரு சகோதரர்கள்.

## கதைச்சுருக்கம்.

மஹாதேவர் என்பவர், தான் சாகுந்தருவாயில் சபாபதி பசுபதி என்ற தன் இரு குமாரர்களையும் அருகிலழைத்து, தான் காலகதியானபின் அவர்கள் மிக்க ஒற்றுமையோடும் அன்போடும் வாழவேண்டும் என்று புத்திமதி கூறி மரித்தார்.

தகப்பனார் சொன்னபடி நடக்க சகோதரர்களுக்குத் தடையில்லை. ஆனால் சபாபதியின் மனைவி லாலா, பொறாமையும் அகம்பாவமும் கொண்டவள். அவள், பசுபதியின் மனைவியும், மிகவும் நற்குணம் உடையவளுமாகிய சாந்தா என்பவளையும் அவள் மக்களையும் படாத பாடுபடுத்தி வந்தாள். தன் கணவனிடத்தில் சாந்தாவைப்பற்றி எப்பொழுதும் பொய்க்குற்றம் சாற்றி அவர் நல்ல மனதை கலைத்து வந்தாள்.

பசுபதி குடும்பப் பொறுப்பும் கல்வியும் இல்லாதவர். ஆனால், சங்கீத பிரியமும், நடிகத் திறமையும் உள்ளவர். ஆகலால் வீட்டுக்காரியங்களைக் கவனியாமல் அந்த ஊர் யுவ நாடகசபை போன்றவற்றில் பெரிதும் நாட்டம் செலுத்திவந்தார். லாலாவின் புருஷரோ, அவ்வூர் ஜமீன்தாரின் ஆபீஸ் மானேஜராக இருந்தார். [illegible] அறிவாளியாயினும் மனையாள் சொல்கேட்பவர்.

லாலாவுக்குத் தூண்டுதல் செய்துவந்தவள், ஊர் வம்பளப்புகளாம் முதலியவற்றிற்குப் பொக்கிஷமான குப்பிப்பாட்டி என்னும் கிழவி. அவள் தூண்டுதலினால், லாலா, தன் கணவனைக் கொண்டும் [illegible] பசுபதி, அவர் மனைவி இவர்களைப்பற்றிக் குறை கூறி அவர் தன் அருமைச் சகோதரனை வெறுக்கச் செய்தாள்.

சேலம் ஸ்தலத்திலிருந்து வீட்டுக்குத் திரும்பிவரும் சமயம் பசுபதியும் சாமியாரும் சாரதா பார்வதி இவர்களுடன் தற்செயலாய்ச் சேர்ந்து கொண்டார்கள்.

பசுபதி உண்மையனைத்தையும் அறிந்துகொண்டான். சாரதா, தன் உன்னத குணத்தினால் ஸாவித்ரியை மன்னித்தாள். சபாபதியரும் மிகவும் வருந்தினார். குடும்பம் திரும்பவும் ஐக்கியப்படுகின்றது. யாவரும் சந்தோஷம் கொள்ளுகின்றனர்.

பசுபதியின் பிரிவினால் வருமபடி குறைந்துபோன சென்னை முருகதாஸ நாடக கம்பெனியார், திரும்பவும் பசுபதியை கம்பெனியின் பங்காளியாக சேர்த்துக்கொள்ளுகின்றார்கள்.

தகப்பனார் மனைவி சொன்னது பழுதுபோகவில்லை ஒற்றுமையே உயர்வு அளிக்கும். சுபம். சுபம்.



பொம்மை வியாபாரி.

(1) விகதுபைரவி] [சாபு

வேடிக்கை பொம்மை—விளையாட்டு பொம்மை
வெவ்வேறு வர்ணங்கள்—வாங்குங்களம்மா
தரத்தில் பொம்மை—தருக்கான பொம்மை
தங்கத்தைப்போலே, மினுக்கான பொம்மை
சுந்தரமான சொகுசான பொம்மை
ருத்திரப் பொம்மைகள்—ஜோரான பொம்மை
சின்னம் சிறு பொம்மை
சிங்கார பொம்மை—
சிங்காரபொம்மை நல
சேனையின பொம்மை
மோட்டாரு வண்டி முரட்டான செக்னா
மிட்டான கப்பல் மிடுக்கான ஏரோப்ளேன்
சீட்டிச் சிறுக்கும் சிரிப்பான பொன்னு
சிவப்பு மாப்பிள்ளை—சிமிட்டுமகனை பாப்பா.
பாலர் சிறுமியர் சிறுவர் சகலரும்
புகழ்தருமதிசயமே—பலவகை
புதுபுடனழகுறுமே—பரிதபில்
தபரிவை விலகுறமே—
வெவ்வேறு வர்ணங்கள்—வாங்குங்களம்மா.

---

பசுபதி.

(2) காபி] [மிச்சாசாபு

சபிபாவர்—அவிரோதி—அமோத ஆபே
ஜடாகேபல    நாரினபேதி
ஆரெ பதருவனஜன காபோரெ மை    வரீனபேதி
ஆரெபதருவல    ஜனகாபோரெ.

நாதைகாப கமரிக்கீா ஜாலம
தாரணி வாழ் வொரு கானவிள கோலம்
சாதைபோலே—வந்தநுலே
சதிசெயும் விதியிலை போதும் போதும்
சங்கடங்கள் தீர்—போதா (ப்ரே)

சரச்ச
(14) இர்த அசாவேரி [தீன்தாள்]

பாதகம பலகாலும் செய்தேன்
பாவிபோ—பழிகாளாகி (பா)
சாதகமிலே—சாக்கௌவே
வேதனைபால விளையேன பாவி
தினை செய்காக நீயகே விளைவாமீதை
தேறவிலே யடிபேன்—தேவா காவாய் (பா)



எமது கைவசம் உள்ள படங்கள்.

மதுரை தேவி பால விநோத சங்கீத சபா நடிகர்கள்.

நவாப்—T. S. ராஜமாணிக்கம்

காமடியன்—K. சாரங்கபாணி

முதலியவர்கள் நடித்த

# பக்த ராமதாஸ்.

ஸ்ரீமதி N. M. சுந்தராம்பாள்

,, T. S. வேலம்மாள்

முதலியவர்கள் நடித்த

# கிருஷ்ண நாரதி.

(கோயமுத்தூர் Dt.)

பரமேஸ்வர் சவுண்டு பிக்சர்ஸ்,

கோயமுத்தூர்.